(ப—ரை.) பெரியார் உவப்பன தாம் உவவார்—பெரியராயுள்ளார் உவந்தனவற்றைத் தாம் உவவார். இல்லம் சிறியாரைக் கொண்டு புகார்—தம்—இல்லத்தின்கண் கீழ்மக்களைக் கொண்டு புகார். அறிவு அறியா பிள்ளையே யாயினும் இழித்து உரையார்—அறிவினை யறியாத பிள்ளையேயாயினும் உயர்த்தன்றி இழித்துச் சொல்லார், தம்மோடு அளவளாவு இல்லர் இடத்து—தம்மோடு அளவளா வில்லா விடத்து.

(க—து.) பெரியார் உவந்தவைகளை ஒருவர் தாம் விரும்புதலும், கீழ்மக்களை வீட்டினுள் அழைத்துப்போதலும், தம்முடனே நெஞ்சு கலந்த நெருக்கம் இல்லாதவர் சிறுபிள்ளையாயினும் அவரை உயர்வாக வன்றி இழிவாகப் பேசுதலும் ஆகா.

அளவளாவு—அளாவு என்பது அடுக்கி மரூஉவாகிய தொடர்மொழி (அளாவு—கலத்தல். அளாவு அளாவு—அளவளாவு—நன்றாகக் கலத்தல்—ஐக்கமா யிருத்தல்).

இடுகுடைத்தேர் மன்னர் எமக்கமையு மென்று
கடிதவர்தாம் காதலிப்ப தாங்காதல் கொண்டு
முடிய எனைத்தும் உணரா முயறல்
கடியன கனைத்து விடல்.—பழமொழிநானூறு.

69. முனியார்; துனியார்; முகத்தெதிர் நில்லார்.
தனிமை யிடத்துக்கண் தங்கருமம் சொல்லார்.
இனியவை யாமறிதும் என்னார். கசிவின்று
காக்கைவெள் ளென்னு மெனின்.

(ப—பொ.) அரசன் செய்வனவற்றை வெறார். அவனோடு கலாயார். விலங்கவன்றி நேர்முகத் தெதிர்நில்லார். அரசன் தனியே நின்ற இடத்தின்கண் தம் கருமம் சொல்லார். இனியவான பொருள்களை யாங்கள் நுகர்ந்தறிவேம் என்று அரசர்க்குச் சொல்லார். காக்கை வெள்ளென்றிருக்குமென்று அரசன் சொல்லினு னாயினும் அவன்மேல் அன்பின்றி வெறார்.

(ப—ரை.) முனியார்—அரசன் செய்வனவற்றை வெறார். துனியார்—அவனோடு கலாயார். முகத்தெதிர் நில்லார்—விலங்க வன்றி நேர் முகத்து எதிர்நில்லார். தனிமை இடத்துக்கண் தங்கருமம் சொல்லார்—அரசன் தனியே நின்ற இடத்தின்கண் தங்கருமம் சொல்லார். இனியவை யாம் அறிதும் என்னார்—இனியவான பொருள்களை யாங்கள் நுகர்ந்தறிவேமென்று அரசற்குச் சொல்லார். காக்கை வெள்ளென்

னும் எனின் கசிவு இன்று—காக்கை வெள்ளென்றிருக்கு மென்று அரசன் சொல்லினுனுயினும் அவன்மேல் அன்பின்றி வெறார்.

(க—து.) அரசன் செய்கின்ற காரியங்களை வெறுத்தலும் அவனோடு கலகங்கொள்ளலும் ஆகா. விலகியன்றி அரசனுக்கு நேர்முகமாக எதிரில்நிற்றல் கூடாது. அரசன் ஏகாந்தமாக இருக்கும்போது அவனிடத்தில் ஒருவர் தம்முடைய காரியங்களைச் சொல்லிக்கொள்ளுதல் ஆகாது. இனிமையான பொருள்களை நாங்கள் அநுபவித்தறிந்திருக்கிறோமென்று அரசனிடத்தில் சொல்லவொண்ணுது. காக்கை வெண்ணிறமுடையது என்ருற் போன்ற அபவாதங்களை அரசன் பேசினுலும் அவன்மே லுள்ள அன்பு நீங்கி வெறுத்தல் ஆகாது.

70. உமிவும் உயர்ந்துழி யேறலும் பாக்கும்
வகையில் உரையும் வளர்ச்சியும் ஐந்தும்
புணரார் பெரியா ரகத்து.

(ப—பொ.) உமிதலும், உயர்ந்தவிடத் தேறியிருத்தலும், பாக்குத்தின்னலும், கூறுபாடில்லாத உரையும், உறங்குதலும், இவ்வைந்தும் அரசர்முன்பு செய்யார்.

(ப—ரை.) உமிவும்—உமிதலும், உயர்ந்துழி ஏறலும்—உயர்ந்த இடத்து ஏறியிருத்தலும், பாக்கும்—பாக்குத்தின்னலும், வகையில் உரையும்—கூறுபாடு இல்லாத உரையும், வளர்ச்சியும்—உறங்குதலும், ஐந்தும்—என இவ்வைந்தையும், பெரியார் அகத்து புணரார்—அரசர் முன்பு செய்யார்.

(க—து.) எச்சில் உமிதல், உயர்வான பீடத்திருத்தல், அடைக்கா யுண்ணல், வகைப்படாத வார்த்தை, உறங்குதல் என்னும் ஐந்தனையும் அரசர்முன்பு செய்யற்க.

பாக்கு தாம்பூலத்தைக் குறித்து நின்றது. வளர்ச்சி—கண்வளர்தல்.

71. இறைவர்முன் செல்வமும் கல்வியும் தேசும்
குணனும் குலமுடையார் கூறார், பகைவர்போல்
பாரித்துப் பல்கால் பயின்று.

(ப—பொ.) அரசர் முன்பு தம் செல்வமும் கல்வியும் தமது விளக்கமும் குணனும் குடிப்பிறந்தார் தமக்குத் துன்பஞ் செய்யும் பகைவர்போல் பரப்பிப் பலகால் பயின்றுரையார்.

(ப—ரை.) குலமுடையார்—குடிப்பிறந்தார், இறைவர் முன்—அரசர் முன்பு, செல்வமும்—தம் செல்வமும், கல்வியும்—கல்வியும், தேசும்—

தமது விளக்கமும், குணனும்—குணனும், பகைவர் போல்—தமக்குத் துன்பஞ் செய்யும் பகைவர்போல், பாரித்து—பரப்பி, பல்கால்—பல் கால், பயின்று கூறார்—பயின்று உரையார்.

(க—து.) அரசரெதிரில் தமது செல்வம் கல்வி விளக்கம் குணம் என்பவைகளைப் பலமுறையும் விரித்துப்பேசுதல் ஒழிக: இது நற் குடிப் பிறப்பினர் ஒழுக்கம்.

பகைவரெதிரிலே பிரதாபம் பேசுவதுபோல், அரசரெதிரில் தமது பெருமையை மிக விரித்துச் சொல்லவேண்டா என்பதாம்.

தேசு—தேஜஸ் என்கிற வடமொழித்தற்பவம்.

72. பெரியார் மனையகத்தும் தேவ குலத்தும்
வணங்கார் குரவரையும் கண்டால்; அணங்கொடு
நேர்பெரியார் செல்லு மிடத்து.

(ப—பொ.) அரசர் மனையகத்தும், தேவாலயங்களுள்ளும், குரவரையும் கண்டால் வணங்கார். தெய்வங்கள் புறம்போந் தெழுந்தருளுமிடத்தும் அரசர் புறம்போது மிடத்தும் கண்டா லும் வணங்கார்.

(ப—ரை.) பெரியார் மனையகத்தும்—அரசர் மனையகத்தும், தேவ குலத்தும்—தேவாலயங்களுள்ளும், குரவரையும் கண்டால் வணங் கார்—குரவரையும் கண்டால் வணங்கார். அணங்கொடு பெரியார் நேர் செல்லுமிடத்து (கண்டால் வணங்கார்)—தெய்வங்கள் புறம்போந்தெழுந் தருளுமிடத்தும் அரசர் புறம்போது மிடத்தும் கண்டாலும் வணங்கார்.

(க—து.) அரமனையிலும் ஆலயத்திலும் தெய்வங்கள் விழாக்கொள் ளுமிடத்தும் அரசர் புறம்போந்து ஊர்வலம் வருதற்கண்ணும் கண் டால் குரவரையும் வணங்காதொழிக.

செல்லுமிடத்தும் என்ற உம்மை தொக்கது. நேர்பெரியார் என்றி யைத்து நேர்மையுடைய பெரியார் என்று கொள்வதும் பொருந்தும்.

73. நகையொடு கொட்டாவி காறிப்புத் தும்மல்
இவையும் பெரியார்முன் செய்யாரே. செய்யின்
அசையாது நிற்கும் பழி.

(ப—பொ.) சிரிப்பும் கொட்டாவியும் காறியுமிதலும் தும்ம லும் என இவையும் அரசர்முன்பு செய்யார். செய்வாராயின், நிற்கும் பழி குறையாது.

(ப—ரை.) நகையொடு கொட்டாவி காறிப்பு தும்மல் இவையும்—சிரிப்பும் கொட்டாவியும் காறியுமிதலும் தும்மலும் என இவையும், பெரியார்முன் செய்யார்—அரசர்முன்பு செய்யார். செய்யின் அசையாது ஏ பழி நிற்கும்—செய்வராயின் குறையாதே பழி நிற்கும்.

(க—து.) அரசரெதிரில் சிரித்தல் கொட்டாவிவிடுதல் காறியுமிதல் தும்முதல் என்னும் இவைகளைச் செய்யற்க. செய்தால் பழி வளரும்.

கொட்டாவி—(கொட்டு + ஆவி) கொட்டி விடப்பட்ட ஆவி. காறிப்பு—காறு என்னும் பகுதியடியாகப் பிறந்த தொழிற்பெயர்.

## ஆசிரியரிடம் ஒழுகு முறைமை

74. நின்றக்கால் நிற்க, அடக்கத்தால்: என்றும்,
இருந்தக்கால் ஏவாமை ஏகார்: பெருந்தக்கார்,
சொல்லிற் செவிகொடுத்துக் கேட்டீக: மீட்டும்
வினுவற்க சொல்லொழிந்தக் கால்.

(ப—பொ.) நன்மாணுக்கர் என்றும் ஆசிரியர்முன் அடங்கியொழுக வேண்டுதலின், அவர் பாடஞ் சொல்லுதலை நிறுத்தினுல் தாமும் நிற்கக்கடவர். அவர்முன் இருந்தபோது அவர் எழுந்துபோ என ஏவுதற்கு முன் எழுந்துபோகார். அவர் பாடம் முதலியவற்றைச் சொல்லின் செவிதாழ்த்துக் கேட்க. அவர் யாதொன்றும் சொல்லாவிடின் தாமும் வினவாதிருக்கக் கடவர்.

(ப—ரை.) பெருந்தக்கார் என்றும் அடக்கத்தால்—நன்மாணுக்கர் என்றும் ஆசிரியர்முன் அடங்கி ஒழுகவேண்டுதலின், நின்றக்கால் நிற்க—அவர் பாடஞ்சொல்லுதலை நிறுத்தினுல் தாமும் நிற்கக் கடவர். இருந்தக்கால் ஏவாமை ஏகார்—அவர்முன் இருந்தபோது அவர் எழுந்துபோ என ஏவுதற்குமுன் எழுந்துபோகார். சொல்லின் செவிகொடுத்து கேட்டீக—அவர் பாடம் முதலியவற்றைச் சொல்லின் செவிதாழ்த்துக் கேட்டிடுக. சொல்லொழிந்தக்கால் மீட்டும் வினுவற்க—அவர் யாதொன்றும் சொல்லாவிடின் தாமும் வினுவாதிருக்கக்கடவர்.

(க—து.) நன் மாணுக்கராவார், ஆசிரியர் பாடஞ் சொல்லுதலை நிறுத்தினுல் தாமும் நிற்கக்கடவர். ஆசிரியர் எழுந்துபோ என்று ஏவு முன்னர் எழுந்துபோகார். ஆசிரியர் பாடம் முதலியவற்றைச் சொன்னுல் செவிதாழ்த்துக் கேட்பர். அவர் யாதொன்றும் சொல்லாவிட்டால் தாமும் வினவாமல் இருக்கக்கடவர்.

சித்திரப்பாவையின் அத்தகவடங்கிச், செவிவாயாக
நெஞ்சுகளனுகக், கேட்டவை கேட்டவை விடாதுளத்தமைத்துப்,
போவெனப்போதல் என்மனுர் புலவர்:—நன்னூல்.

கேட்டீக—வியங்கோட்டிரிசொல் விகாரமாய் நின்றது. "சினை வாடச் சிறக்குநின் சினந்தணிந்தீகென" எனப் பாலைக் கலியில் வருகின்றது.

ஒரு பிரதியில் பொழிப்புரை இங்ஙனம் எழுதியிருக்கிறது:—அரசர் எழுந்து நின்றக்கால் தாமும் அடக்கத்தோடும் எழுந்திருந்து நிற்க. அவ்வரசர் உயர்ந்த ஓரிடத்தின்கண் இருந்தால் அவர் ஏவாமை அதன்மேல் ஏறாதொழிக. பெருங்குணத்தை யுடையார் சொல்லின் செவி கொடுத்துக் கடைப்பிடித்துக் கேட்க. அவர் சொல்லி ஒழிந்தக்கால் அவர் சொல்லியதனைப் பின்னை வினவுற்க.

இந்த உரைக்கு "ஏவாமை யேறுர்" என்பது பாடம்.

## பெரியோர் சபையில் தவிர்வன

75. உடுக்கை இகவார், செவிசொறுண்டார்; கைமேல்
எடுத்துரையார்; பெண்டிர்மேல் நோக்கார்; செவிச்சொல்லும்
கொள்ளார், பெரியா ரகத்து.

(ப—பொ.) பெரியா ரவைக்களத்தில் ஆடையைக் களையார். காதைச் சொறியார். கை மேலெடுத்துப் பேசார். மாதர்களை நோக்கார். பிறர்தம் செவியிற் சொல்லும் சொல்லையும் கேளார்.

(ப—ரை.) பெரியாரகத்து – பெரியா ரவைக்களத்தில், உடுக்கை இகவார் – ஆடையைக் களையார்; செவி சொறுண்டார் – காதைச் சொறியார்; கைமேல் எடுத்து உரையார்—கை மேலெடுத்துப் பேசார்; பெண்டிர்மேல் நோக்கார் – மாதர்களை நோக்கார்; செவிச்சொல்லும் கொள்ளார்-பிறர் தம்செவியில் சொல்லும் சொல்லையும் கேளார்.

(க—து.) பெரியோர் கூடியிருக்கின்ற சபையிலே, ஆடையைக் களைதலும், காதைச் சொறிதலும், கையை மேலெடுத்துப் பேசுதலும், பெண்டிரை உற்றுப்பார்த்தலும், பிறர் தமது செவியில் சொல்லும் சொல்லைக் கேட்டலும் ஆகா.

"செவிச் சொல்லும் கேளார்" என்றும் பாடம். [சொறுண்டு—இது இக்காலத்துச் சுரண்டு என வழங்கிவருகிறது.] பிரதிகளில் சுறண்டார் என்றும் பாடபேதம் உண்டு.

மற்றொரு பிரதியில்பொழிப்புரை வருமாறு:—தாம் உடுத்த உடுக்கையை இகழ்ந்து சோரவிடார். செவியைத் தோண்டார். தம்மை அரசன்மேல் எடுத்துரையார். அவன் பெண்டிர் மாட்டு நோக்கார். பிறனொருவன் செவியிற் சொல்லும் சொல்லையும் விரும்பார்.

## ஒருவரிடம் ஒன்றுரைக்கும் செவ்வி

76. விரைந்துரையார்; மேன்மே லுரையார்; பொய்யாய
பரந்துரையார்; பாரித் துரையார்;—ஒருங்கெனைத்தும்
சில்லெழுத்தி னாலே பொருளடங்கக் காலத்தால்
சொல்லுக செவ்வி யறிந்து.

(ப—பொ.) கடுகி உரையார். மேன்மேல் உரையார். பொய் யாய சொற்களைப் பரக்க உரையார். தாம் உரைக்கத்தக்க சொற்களை பரப்பி உரையார். கூற வேண்டிய எனைத்தினையும் ஒருமிக்கச் சில்லெழுத்தினானே பொருள் விளங்கும் வகை காலத்தொடுபடுத் தவன் செவ்வியறிந்து சொல்லுக.

(ப—ரை.) விரைந்து உரையார் — கடுகி உரையார்; மேன்மேல் உரையார்—மேன்மேல் உரையார்; பொய்யாய பரந்து உரையார்—பொய்யாய சொற்களைப் பரக்க உரையார்; பாரித்து உரையார்—தாம் உரைக்கத்தக்க சொற்களைப் பரப்பியுரையார். சில் எழுத்தி னாலே ஒருங்கெனைத்தும் பொருள் அடங்க—சில்லெழுத்தினானே முழுவதும் பொருள் விளங்கும் வகை, காலத்தால் செவ்வியறிந்து சொல்லுக—காலத்தோடு பொருந்தச் செவ்வியறிந்து சொல்லுக.

(க—து.) ஒருவரிடத்தில் ஒன்றைச் சொல்லும்போது அவசரப் படுதலும், சொன்னதை மேன்மேலும் சொல்லுதலும், பொய்யைப் பரக்கச் சொல்லுதலும், சொல்வதை வெகுவாய் விரித்துச் சொல் லுதலும் கூடா. சொல்லவேண்டிய பொருளெல்லாவற்றையும் சில எழுத்துக்களில் அடக்கிக் காலத்திற் கேற்றபடி சொல்லவேண்டும்.

பலசொல்லக் காமுறுவர் மன்ற மாசற்ற
சிலசொல்லல் தேற்றா தவர்.—திருக்குறள்.

சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளைச் செறித்தினிதுரைத் தல் நன்று என்பதாம். மிகைபடச் சொல்லேல் என்றபடி. Few words are best.

## குலமாதர் தவிர்வன

77. தம்மேனி நோக்கார்; தலையுளரார்; கைந்நொடியார்;
எம்மேனி யாயினும் நோக்கார் தலைமகன்
தன்மேனி யல்லாற் பிற.

(ப—பொ.) நற்குலப் பெண்டிர், தம் கணவரது உடலின் வடிவத்தை யன்றி ஏனை ஆடவரது மேனி எத்துணை அழகுடையவேனும் பாரார்: தம் உடலின் வடிவத்தையும் நோக்கார்: தலைமயிரைக் கோதார்: கைந்நொடித்தல் முதலியன செய்யார்.

(ப-ரை.) தலைமகன் தன்மேனி அல்லால் பிற எம்மேனி யாயினும் நோக்கார்—நற்குலப்பெண்டிர் தம் கணவரது உடலின் வடிவத்தையன்றி ஏனை ஆடவரது மேனி எத்துணை அழகுடையவேனும் பாரார்: தம்மேனி நோக்கார்—தம் உடலின் வடிவத்தையும் நோக்கார்: தலை உளரார்—தலைமயிரைக் கோதார்: கைந்நொடியார்—கைந்நொடித்தல் முதலியன செய்யார்.

(க—து.) குலமாதர் தம்முடைய கணவரது தேகத்தின் வடிவத்தை யன்றிப் பிறருடைய தேகத்தின் வடிவழகை வியந்து பாரார். தம்முடைய வடிவழகையும் (கண்ணாடி முதலியவற்றில்) வியந்து பாரார். தலைமயிரைக் கோதுதலும் கைந்நொடித்தலும் செய்யார்.

உளர்தல்—தடவுதல் (கோதுதல்)

ஒரு பிரதி பொழிப்புரைக்குமாறு:—தம் உடம்பினை நோக்கார். தலைமயிரைக் கோதார். கையால் நொடியார்: அரசன் றன் மேனியல்லது எம்மேனியாயினும் பிறவற்றை நோக்கார்.

## அரசவையில் தவிர்வன

78. பிறரொடு மந்திரம் கொள்ளார்; இறைவனைச்
சாரார்: செவியோரார்; சாரின் பிறிதொன்று
தேர்வார்போல் நிற்க திரிந்து.

(ப—பொ.) பிறரொடுகூட இருந்து ஒன்றனை ஆராயார். அரசனைச் சார நில்லார். அரசன் பிறனொருவனுக்குச் சொல்லும் சொல்லைத் தம்செவியால் ஓரார். அரசன் ஒன்றனை ஒருவனுக்குச் சொல்லும்பொழுதும் குறுகாநின்று

ரெனின் பிறிதொன்றனை ஆராய்வார்போல முகந்திரிந்து நிற்க.

(ப—ரை.) பிறரொடு மந்திரம் கொள்ளார்—பிறரொடுகூட இருந்து ஒன்றனை ஆராயார். இறைவனை சாரார்—அரசனைச் சார நில்லார். செவி ஓரார்—அரசன் பிறனொருவனுக்குச் சொல்லும் சொல்லைத் தம் செவியால் ஓரார். சாரில் பிறிதொன்று தேர்வார்போல் திரிந்து நிற்க—சார்ந்து நின்றவிடத்துப் பிறிதொரு காரியத்தை ஆராய்வார்போல முகந்திரிந்து நிற்க.

(க—து.) அரசனெதிரில் வேறொருவரோடுகூட இருந்துகொண்டு ஒரு காரியத்தை ஆராய்தலும், அரசனுக்குச் சமீபத்தில் நிற்றலும், அரசன் வேறொருவனிடத்துச் சொல்வதொரு காரியத்தைச் செவி கொடுத்துக் கேட்டலும் ஆகா. அப்போது சமீபத்தில் செல்வதாயின் வேறொரு காரியத்தில் கவனமாயிருப்பதுபோல் இருக்கவேண்டும்.

செவிச்சொல்லும் சேர்ந்த நகையும் அவித்தொழுகல்
ஆன்ற பெரியா ரகத்து.—திருக்குறள்.

## செய்வன தவிர்வன

79. துன்பத்துள் துன்புற்று வாழ்தலும், இன்பத்துள்
இன்ப வகையான் ஒழுகலும்,—அன்பின்
செறப்பட்டார் இல்லம் புகாமை, இம் மூன்றும்
திறப்பட்டார் கண்ணே உள.

(ப—பொ) துன்பக்காலத்தில் அத்துன்பத்துள் அமைவுற்று வாழ்தலும், இன்பக்காலத்தில் பிறர்க்கு இன்புசெய்யும் வகையான் இன்புற்று நடத்தலும், அன்பினின்றும் வேறுபட்டா ரில்லம் புகாமையு மாகிய இம்மூன்றும், ஒரு திறப்பட்டார்கண்ணே உளவாம்.

(ப—ரை.) துன்பத்துள் துன்புற்று வாழ்தலும் — துன்பக்காலத்தில் அத்துன்பத்துள் அமைவுற்று வாழ்தலும், இன்பத்துள் இன்பவகையான் ஒழுகலும்—இன்பக்காலத்தில் பிறர்க்கு இன்புசெய்யும் வகையான் இன்புற்று நடத்தலும், அன்பின் செறப்பட்டார் இல்லம் புகாமை (உம்)—அன்பினின்றும் வேறுபட்டா ரில்லம் புகாமையும், இ மூன்றும்—ஆகிய இம்மூன்றும், திறப்பட்டார் கண்ணே உள—ஒருதிறப்பட்டார் கண்ணே உளவாம்.

(க—து.) தமக்குத் துன்பம் நேரிட்ட காலத்தில் அதனைப் பொறுத்திருத்தலும், இன்பம் உண்டானால் மற்றவர்களுக்கு நன்மைசெய்வதில் சந்தோஷங்கொண்டு நடத்தலும், அன்பு நீங்கினவருடைய வீட்டையடையாமையும் ஆகிய இம்மூன்றும், ஒரு வழிப்பட்டவரிடத்தே காணப்படும் குணங்களாம்.

வேறொரு பிரதியில்:—அரசர் துன்பமுறும்பொழுது துன்பமுறுதலும், அவர் இன்பமுறும்பொழுது தாம் இன்பவகையால் ஒழுகுதலும், அவரன்பினீங்கிச் செறப்பட்டாரில்லத்துப் புகாமையும் என இம்மூன்றும் திறப்பட்டார் கண்ணே உளவாம்.

80\. செறுவந்தும் தங்குரவர் பேருரையார். இல்லத்
உறுமி நெடிதும் இரா அர். பெரியாரை
என்றும் முறைகொண்டு கூறார். புலையரையும்
நன்கறிவார் கூறார் முறை.

(ப—பொ.) நன்கறிவார், தாம் வெகுண்டாராயினும், தம் குரவர் பெயரைச் சொல்லார். தம்மில்லத்தின் தம்மனையை மிகவும் கழறியுரைத்து நெடிதிரார். தம்மிற் பெரியாரை முறைப்பெயர் கொண்டு சொல்லார்: புலையரையும் முறைப் பெயர் கொண்டு கூறார்.

(ப—ரை.) நன்கறிவார்—நன்கறிவார், செறுவந்தும் தம் குரவர்பேர் உரையார் — தாம் வெகுண்டாராயினும் தம் குரவர் பெயரைச் சொல்லார். இல்லத்து நெடிதும் உறுமி இரார் — தம்மில்லத்தின்கண் தம் மனையை நெடுநேரம் மிகவும் கடிந்துரைத்து இரார். என்றும் பெரியாரை முறைகொண்டு கூறார்—என்றும் தம்மிற் பெரியாரை முறைப் பெயர்கொண்டு சொல்லார். புலையரையும் முறைகூறார்—புலையரையும் முறைப்பெயர்கொண்டு கூறார்.

(க—து.) கோபங்கொண்டு நின்றவிடத்தும் தம்முடைய குரவாது பெயரைச் சொல்லல் ஆகாது. நெடுநேரமளவாக மனையாளை மிகக் கடிந்து பேசியிருத்தல் கூடாது. தம்மிற் பெரியோரையும் புலையரையும் முறைப்பெயர்கொண்டு அழைத்தலாகாது.

செறுவந்து—(செறு—அழி) அழிய வந்து; அழிதற்குக் காரணமான கோபம் உண்டாகி. உறுமி — ஒலிக்குறிப்புப்பற்றி வந்தசொல்.

81. புழைக்கடைப்பு காரரசன் கோட்டி யுரிமை
இவற்றுக்கண் செவ்வியார் நோக்காரே அவ்வத்
தொழிற்குரிய ரல்லா தவர்.

(ப—பொ.) பிறர் மனையின்கண் புழைக்கடை வாயிலால் புகார்; அரசன் கோட்டிகொண்டு கூற்று முதலாயின இன்புறு நின்ற விடத்தும், உரிமை மகளிரோ டிருந்த விடத்தும், செவ்வியராயுள்ளார் சென்று நோக்கார், அந்தந்தத் தொழிற் குரிய ரல்லாதார்.

(ப—ரை.) புழைக்கடை புகார் — பிறர் மனையின்கண் புழைக்கடை வாயிலால் புகார். அரசன் கோட்டி உரிமை இவற்றுக்கண் — அரசன் கோட்டிகொண்டு கூற்றுமுதலாயின இன்புறுநின்ற விடத்தும் உரிமை மகளிரோடு இருந்தவிடத்தும், செவ்வியார் நோக்கார்—செவ்வியரா யுள்ளார் சென்றுநோக்கார், அவ்வத்தொழிற்கு உரியரல்லாதவர்—அந்த அந்தத் தொழிற்கு உரியரல்லாதார்.

(க—து.) வேறொருவருடைய வீட்டினிடத்தில் புழைக்கடை வாயிலாக உள்ளே போதலாகாது. அரசன் கோட்டிகொண்டு கூற்று முதலாயின இன்புறுநின்ற விடத்தும், உரிமைமகளிரோ டிருக்குமிடத்தும், அவ்வத்தொழிலுக்கு உரியவர்களன்றி மற்றவர்கள் போய்ப்பார்த்தல் கூடாது.

புழைக்கடை—(புழை—துவாரம்)—துவாரத்தின் கடை. வீடுகளை இடையீடாக ஏற இடம் விட்டுக் கட்டுவது தமிழ் நாட்டில் வழக்கம். இவ்விடையீடான இடம் வீட்டுக்குப் புழை (துவாரம்) போல இருத்தத்தால் அதன் கடையைப் புழைக்கடை என்பது மரபாயிற்று. இது ஆகு பெயராய் வீட்டின் பின்பிறத்துள்ள நிலத்தைக் குறிப்பதாயிற்று. "எங்கள் தோட்டத்துப் புழைக்கடை வாவியுள்" எனத் திருப்பாவையில் வருகின்றது. கோட்டி—கோஷ்டி என்னும் வடசொல்.

"புழைக்கடைப் பின்புகார் கோட்டி"—பாடபேதம்.

### போது மகளிருக்குச் சமீபத்தில் வசிக்கலாகாமை

82. வண்ண மகளி ரிடத்தொடு தம்மிடம்
ஒள்ளிய மென்பார் இடங்கொள்ளார். தெள்ளி
மிகக்கிழமை உண்டெனினும் வேண்டாவே; பெண்டிர்க்
குவப்பன வேறாய் விடும்.

(ப—பொ.) அறிவுடையோரென்று சொல்லப்படுவோர், கோலஞ் செய்யும் மகளிரிடத்தோடு சேர்ந்த தம்மிடத்தைச் சிறந்த

இடமாகக் கொள்ளார். தெளிவுற்று மிகுந்த உரிமை உளதா யினும் விரும்பப்படுவன வல்ல; தம்மனைவியர்க்கு விரும்பப் படுவன வேறுபடும் ஆதலால்.

(ப—ரை) ஒள்ளியம் என்பார் — அறிவுடையோரென்று சொல்லப் படுவோர், வண்ணமகளி ரிடத்தொடு தம்மிடம் இடங்கொள்ளார்—கோ லஞ்செய்யும் மகளிரிடத்தோடு சேர்ந்த தம்மிடத்தைச் சிறந்த இடமாகக் கொள்ளார். தெள்ளி — தெளிவுற்று, மிக கிழமை உண்டெனினும்— மிகுந்த உரிமை உளதாயினும், வேண்டாவே—விரும்பப்படுவன அல்ல, பெண்டிர்க்கு உவப்பன வேறு ஆய்விடும்—தம் மனைவியர்க்கு விரும்பப் படுவன வேறுபடு மாதலால்.

(க—து.) பொதுமகளிர் வசிக்கின்ற இடத்திற்குச் சமீபமாக உள்ள தம்முடைய இடத்தை வசிப்பதற் குரிய சிறந்த இடமாகக் கொள்ளலா காது. அங்ஙனங் கொண்டால் தம்முடைய மனைவியாது மனவிருப்ப மெல்லாம் வேறுபடும்.

பிரதிபேதம்:—அழகையுடைய மகளிரிடத்தோடு சேரத் தமக்கு உறையுமிடமாகத் தம்மை ஒள்ளியமென்று கருது வார் இடங்கொள்ளார்: ஆராய்ந்து தம்மோடுரிமை உண்டெனி னும் இடங்கொள்ளவேண்டா: பெண்டிர் பொருட்டுத் தம் மனம் வேறுபட்டிருக்கு மாதலால்.

## தவிர்வன சில

83. நிரல்படச் செல்லார்; நிழல்மிதித்து நில்லார்;
உரையிடை ஆய்ந்துரையார்; ஊர்முனிவ செய்யார்;
அரசர் படையளவும் சொல்லாரே; என்றும்
கடைபோக வாழ்துமென் பார்.

(ப—பொ.) ஒருவர் பக்கத்தில் வரிசைப்படப் போகார்; ஒருவருடைய நிழலை மிதித்து நில்லார்; முன்னர் ஆராய்ந்தன் றிப் பேசும்போது ஆராய்ச்சிசெய்து பேசார்; ஊரிலுள்ளோர் வெறுக்கத்தக்கவைகளைச் செய்யார். அரசரது படையளவைப் பகைவர்க்குச் சொல்லார், எப்போதும் ஒரு தன்மையராய் வாழ்தும் என்பார்.

(ப—ரை.) என்றும் கடைபோக வாழ்தும் என்பார்—எப்போதும் ஒருதன்மையாக வாழ்து மென்பார், நிரல்படச் செல்லார் — ஒருவர்பக் கத்தில் வரிசைப்படப் போகார்; நிழல் மிதித்து நில்லார்—ஒருவருடைய

நிழலை மிதித்து நில்லார். உரையிடை ஆய்ந்துரையார் – முன்னர் ஆராய்ந்தன்றிப் பேசும்போது ஆராய்ச்சி செய்து பேசார்; ஊர் முனிவ செய்யார்—ஊரிலுள்ளோர் வெறுக்கத்தக்கவைகளைச் செய்யார்; அரசர் படையளவும் சொல்லார் – அரசரது படையளவைப் பகைவர்க்குச் சொல்லார்.

(க—து.) ஒருவர் பக்கத்திலே போகும்போது ஒரு வரிசைப்படப் போதலாகாது. ஒருவருடைய நிழலை மிதித்துக்கொண்டு நிற்கவொண்ணாது. முன்னதாகவே ஆராய்ந்துகொண்டு பேசுவதல்லது, பேசும்போது ஆராய்ச்சிசெய்து பேசுதல் கூடாது. ஊரினர்க்கு வெறுப்பான காரியங்களைச் செய்தல் அடுக்காது. அரசருடைய படையின் அளவைப் பகைவருக்குச் சொல்லலாகாது.

முனிவ—வினையாலணையும் பெயர்.

பொழிப்புரையின் பிரதிபேதம்:—அரசரோடடுத்து ஒக்க நேரே செல்லார்; அரசர் நிழலை மிதித்து நில்லார்; அரசர் சொல் விடை எதிர்த்துரையார்; அவ்வரசர் உறையும் ஊர் வெறுப்ப உரையார்: அவ்வரசர் படையளவையும் வரையறுத்துப் பிறர் கேட்பச் சொல்லார், கடைபோக வாழ்துமென்று கருதுவோர்.

## அரசரை இகழாமை

84. அளையுறை பாம்பும் அரசும் நெருப்பும்
முழையுறை சீயமும் என்றிவை நான்கும்
இளைய எளிய பயின்றனஎன் றெண்ணி
இகழின் இழுக்கந் தரும்.

(ப—பொ.) புற்றில் வாழ் அரவும் அரசனும் தீயும் குகையில் வாழ் சிங்கமும் என்கின்ற இந்நான்கினையும், இளைய வென்றும் எளிய வென்றும் பழகிய வென்றும் கருதி இகழ்வானாயின், தனக்குக் கேட்டைத் தரும்.

(ப—ரை.) அளை உறை பாம்பும் – புற்றில் வாழ் அரவும், அரசும்—அரசனும், நெருப்பும்-தீயும், முழை உறை சீயமும் – குகையில் வாழ் சிங்கமும், என்ற இவை நான்கும்—என்கின்ற இந்நான்கனையும், இளைய என்று—இளையன என்றும், எளிய என்று – எளியன என்றும், பயின்றன என்று – பழகினவை என்றும், எண்ணி இகழின்—எண்ணி இகழின், இழுக்கம் தரும்—துன்பம் தருவனவாம்.

(க—து.) பாம்பு அரசன் நெருப்பு சிங்கம் என்கிற இந்நான்கையும் இளையனவென்றும் எளியனவென்றும் பழகினவென்றும் இகழ்ந்தால் துன்பம் உண்டாகும்.

இளையர் இனமுறையர் என்றிகழார் நின்ற
ஒளியோ டொழுகப்படும்.—திருக்குறள்

சீர்த்தகு மன்னர் சிறந்தனைத்துங் கெட்டாலும்
நேர்த்துரைத் தெள்ளார் நிலைநோக்கிச்—சீர்த்த
கிளையின்றிப் போஒய்த் தனித்தாயக் கண்ணும்
இளைதென்று பாம்பிகழ்வா ரில்.—பழமொழிநானூறு

## அரசரின் மேம்படச் செய்யலாகாதவை

85. அறத்தொடு கல்யாணம் ஆள்வினை கூரை
இறப்பப் பெருகியக் கண்ணும்—திறப்பட்டார்
மன்னரின் மேம்படச் செய்யற்க செய்பவேல்
மன்னிய செல்வம் கெடும்.

(ப—பொ.) அறிவுடையோர் தம்மாட்டுச்செல்வம் மிகப் பெருகியவிடத்தும், அறத்தினையும் கல்லியாணத்தினையும் முயற்சியையும் வீட்டினையும் அரசர் செய்வதினும் மேம்படச் செய்யாதொழிக. செய்வாராயின் தம்மாட் டுற்ற செல்வம் கெடும்.

(ப—ரை.) திறப்பட்டார் இறப்ப பெருகியக் கண்ணும்—அறிவுடையோர் தம்மாட்டுச் செல்வம் மிகப் பெருகிய விடத்தும், அறத்தொடு கல்யாணம் ஆள்வினை கூரை—அறத்தினையும் கல்யாணத்தினையும் முயற்சியையும் வீட்டினையும், மன்னரின் மேம்பட செய்யற்க—அரசர் செய்வதினும் மேம்படச் செய்யாதொழிக. செய்பவேல்—செய்வாராயின், மன்னிய செல்வம் கெடும்—தம்மாட் டுற்ற செல்வம் கெடும்.

(க—து.) எவ்வளவு மிக்க செல்வம் உடையவராயினும், தருமம் — கல்லியாணம்—ஒரு தொழின்முயற்சி—வீடு என்னும் இவைகளை அரசரைக் காட்டிலும் மேன்மையாக ஒருவர் செய்தலாகாது: செய்தால் தம்மிடத்துள்ள செல்வம் அழிவடையும்.

## குரவர் முதலியோரை உண்டது கேளாமை

86, உண்டது கேளார் குரவரை மிக்காரைக்
கண்டுழிக் கண்டால் மனந்திரியார். புல்லரையும்
உண்டது கேளார் விடல்.

(ப—பொ.) ஐங்குரவரையும் சான்றோரையும் கண்டால் மனம் வேறுபடாதவர்கள் அவரை நோக்கி 'நீவிர் உண்டது யாது' என வினவார். ஆதலால் கீழோரையும் 'நீவிர் உண்டது யாது' என்று வினவாதொழிக.

(ப—ரை.) மனம் திரியார்—மனம் வேறுபடாதவர்கள், குரவரை மிக்காரை கண்டால்—ஐங்குரவரையும் சான்றோரையும் கண்டால், கண்டுழி—கண்டவிடத்து, (அவரை நோக்கி), உண்டது கேளார்—நீவிர் உண்டது யாதெனவினவார், (ஆதலால்), புல்லரையும் உண்டது கேளார் விடல்—கீழோரையும் உண்டது யாதென்று வினவாதொழிக.

(க—து.) ஐங்குரவரையும் பெரியோரையும் கண்டால் 'நீங்கள் உண்டது என்ன' என்று கேட்டலாகாது. ஆதலால், கீழோரையும் அங்ஙனம் கேட்கவேண்டா.

பொழிப்புரையின் பிரதிபேதம்.—தம்குரவரை "உண்டபடி எப்படி? என்ன கறிபெற்றீர்?" என்றுகேளார்.

"கண்டுழிக்கண் டாமங் திரியார்" என்றும் "கண்டுழிக்கண்டான் முகந்திரியார்" என்றும் பாடபேத முண்டு. [தாமம்—புகழ்.]

திரியார்—வினையாலணையும் பெயர்.

## தவிர்வன சில

87. கிடந்தாரைக் கால்கழுவார், பூப்பெய்யார், சாந்தம்
மறந்தானும் எஞ்ஞான்றும் பூசார், கிடந்தார்கண்
நில்லார்தாம் கட்டின் மிசை.

(ப—பொ.) எப்போதும், கட்டிலின்மீது படுத்திருப்பவரது காலைக்கழுவார்: அவருக்குப் பூப்புனையார்: அவருக்கு மறந்தாவது சந்தனம் பூசார்: அருகில் நிற்றலும் செய்யார்.

(ப—ரை.) எ ஞான்றும்—எப்போதும், கட்டில் மிசை கிடந்தாரை கால்கழுவார்—கட்டின்மீது படுத்திருப்பவரது காலைக் கழுவார்; பூ பெய்யார்—அவருக்குப் பூப்புனையார்; மறந்தானும் சாந்தம் பூசார்—அவருக்கு மறந்தாவது சந்தனம் பூசார். கிடந்தார்கண் நில்லார்—கிடந்தாரருகில் நிற்றலுஞ் செய்யார்.

(க—து.) ஒருவர் கட்டிலின்மேல் படுத்திருந்தால், அப்போது அவருடைய காலைக் கழுவுதலும்—அவருக்குப் பூச்சூடுதலும்—சந்தனம் பூசுதலும்—அவரருகில் நிற்றலும் ஆகா.

கிடந்தாரைக் கால்கழுவார் என்னும் முடிபை, "முதலை ஐயுறின் சினையைக் கண்ணுறும், அதுமுதற் காயின் சினைக்கையாகும்". (நன்—315) என்கிறபடி முடித்துக்கொள்ளவேண்டும். கிடந்தாரைப் பூப் பெய்யார் என்பது கிடந்தாருக்கு என நான்காவதில் மயங்கிவந்ததாகக் கொள்ளவேண்டும்.

"நில்லாராம் கட்டின் மிசை" என்றும் பாடம்.

பிரதிபேதம்:—கிடந்தாரைக் காலைக் கழுவார்; பூவைச் சூடார்; சாந்தத்தை மறந்தேயாயினும் எஞ்ஞான்றும் பூசார். கிடந்தவர்கள் கட்டின்மேலே மிதித்தேறி நில்லார்.

88. உதவிப் பயனுரையார்; உண்டி பழியார்;
அறத்தொடு தாம்நோற்ற நோன்பு வியவார்;
திறத்துளி வாழ்துமென் பார்.

(ப—பொ.) தாம் ஒருவருக்குச் செய்த நன்றியின் பயனைச் சொல்லார்; தமக்கு ஒருவர் இட்ட உணவை இகழ்ந்துரையார்; தாம் செய்த அறத்தையும் விரதத்தையும் புகழ்ந்துரையார்; பெரியோருடைய ஒழுக்கத்தினை நினைந்து அவ்வாறு வாழ்துமென்று எண்ணுவோர்.

(ப—ரை.) உதவி பயன் உரையார்—தாம் ஒருவருக்குச் செய்த நன்றியின் பயனைச் சொல்லார்; உண்டி பழியார்—தமக்கு ஒருவர் இட்ட உணவை இகழ்ந்துரையார்; தாம் அறத்தொடுநோற்ற நோன்பு வியவார்—தாம் செய்த அறத்தையும் விரதத்தையும் புகழ்ந்துரையார், திறத்து உள்ளி வாழ்தும் என்பார்—பெரியோருடைய ஒழுக்கத்தினை நினைத்து அவ்வாறு வாழ்துமென்று எண்ணுவோர்.

(க—து.) தாம் ஒருவர்க்குச் செய்த நன்றியைத் தாமே பாராட்டுதலாகாது. தமக்கு ஒருவர் இட்ட உணவை இகழ்ச்சிசெய்தல் கூடாது. தாம் செய்த தருமத்தையும் அநுஷ்டித்த விரதத்தையும் தாமே புகழ்ந்து கொள்ளுதலாகாது.

"தான்புரி தவத்தைக் கொடையினைப் புகழின் தழைவுறுதஃகும்"—காசிகண்டம்.

பொழிப்புரையின் பிரதிபேதம்:—பிறர்க்குத் தாம் உதவிய வகையால் அங்கே அவர்க்கு வந்த பயனை உரையார். தாம் உண்ட உணவைப் பழியார். தாம் செய்த அறத்தினையும் நோற்ற நோன்பினையும் மதித்து வியவார், முறைமையால் வாழ்துமென்று கருதுவார்.

89. எய்தாத வேண்டார்; இரங்கார் இழந்ததற்குக்;
கைவாரா வந்த இடுக்கண் மனமழுங்கார்;
மெய்யாய காட்சி யவர்.

(ப—பொ.) தமக்குக் கிடைத்தற் கரியவற்றை விரும்பார்; தம்மால் இழக்கப்பட்டனவற்றிற்கு வருந்தார்; அகற்றற் கரிய இடுக்கண் உற்றுழி அதற்கு மனங்கலங்கார், உண்மை யான அறிவினையுடையார்.

(ப—ரை.) எய்தாத வேண்டார்—தமக்குக் கிடைத்தற் கரியவற்றை விரும்பார்; இழந்ததற்கு இரங்கார்—தம்மால் இழக்கப்பட்டனவற்றிற்கு வருந்தார்; கைவாரா வந்த இடுக்கண் மனம் அழுங்கார்—அகற்றற் கரிய இடுக்கண் உற்றுழி அதற்கு மனம் கலங்கார், மெய்யாய காட்சி யவர்—உண்மையான அறிவினையுடையார்.

(க—து.) கிடைப்பது அருமையான பொருள்களை விரும்புவதும், இழந்த பொருளைக் குறித்து வருந்துவதும், நீக்கமுடியாத துன்பம் நேரிட்டால் அதற்கு மனங்கலங்குவதும் பயனில்லாத காரியங்களாம்.

"கழிந்தவை தானிரங்கான்"—சிறு பஞ்சமூலம் கைவாரா—ஈறு கெட்ட எதிர்மறை வினையெச்சம் — (கைவருதல் — கைக்ககப்படுதல், அநுகூலமாதல்)—அநுகூலப்படாது. கைவாராவந்த இடுக்கண்—அநு கூலப்படாத இடுக்கண் — பிரதிகூலமான இடுக்கண். கைவாராத பொருள்கள் என்கிற அர்த்தத்தில் அது வினையாலணையும் பெயர்.

"கையார வந்த இடுக்கண்" என்பது ஒரு பிரதியில் கண்ட பாடம்.

பொழிப்பின் பிரதிபேதம்:—தமக்குக் கிடையாதனவற் றைக் காதலியார்: தாம் இழந்ததற் கிரங்கார்: தாம் முயன்று செய்யும் பொருள்கள் கைவாராமையால் வந்த இடும்பைக்கு மனம் வாடார்; மெய்யாகிய அறிவினையுடையார்.

90. தலைக்கிட்ட பூமேவார்; மோந்தபூச் சூடார்.
பசுக்கொடுப்பின் பார்ப்பார்கைக் கொள்ளாரே என்றும்.
புலைக்கெச்சில் நீட்டார். விடல்.

(ப—பொ.) எப்போதும் ஒருவர் தலையில் முடித்த பூவைத் தாம் முடியார்; ஒருவர் மோந்த பூவையும் சூடார். பிரா

மணர் பசுவினைக் கொடுத்தால் அதனை வாங்கார். புலையருக்கு எச்சிலைக் கொடார். ஆதலால் இவைகளை விடுக.

(ப—ரை.) என்றும்—எப்போதும், தலைக்கு இட்ட பூ மேவார்—ஒருவர் தலையில் முடித்த பூவைத் தாம் முடியார். மோந்த பூ சூடார்—ஒருவர் மோந்த பூவையும் சூடார். பார்ப்பார் பசு கொடுப்பின் கைக்கொள்ளார்—பிராமணர் பசுவினைக் கொடுத்தால் அதனை வாங்கார். புலைக்கு எச்சில் நீட்டார்—புலையருக்கு எச்சிலைக் கொடார். விடல்—ஆதலால் இவைகளை விடுக.

(க—து.) ஒருவர் தலையில் முடித்த பூவைத் தம்முடைய தலையில் முடித்தலும், ஒருவர் மோந்த பூவைச் சூடுதலும், பிராமணரிடம் கோதானம் வாங்குதலும் கூடா. புலையருக்கு எச்சிற் பண்டங்களைக் கொடுத்தல் ஆகாது.

"தலைக்கிட்ட பூமோவார்" என்றும் பாடம்.

பொழிப்பின் பிரதிபேதம்:—பிறர் தலைக்குச் சூடிய பூவை மோவார். மோந்த பூவினைச் சூடார். பார்ப்பார் கொடுத்தால் அவர்கைப் பசுத் தம்கைக் கொள்ளார். எஞ்ஞான்றும் புலைக்குத் தாம் உண்ட எச்சிலை நீட்டாதுவிடுக.

## அடக்கம்

91. மோட்டுடைப்போர்வையோடேக்கழுத்தம்தாளிசைப்புக்
காட்டுளே யானும் பழித்தார மாம், தம்மின்
மூத்த உளவாக லான்.

(ப—பொ.) காட்டினிடத்திலேனும் தம்மூத்தோர் உளரா யிருப்பாராயின், அவர்முன் உடலின்மீது போர்த்தலும், இறுமாந்திருத்தலும், இருதாளையும் சேர்த்து இணைத்திருத்தலும் பழியின் எல்லையாம்.

(ப—ரை.) காட்டுளே யானும்—காட்டினிடத்திலேனும், தம்மின் மூத்த உளவாகலான்—தம் மூத்தோர் உளரா யிருப்பாராயின், (அவர் முன்), மோட்டுடைப் போர்வையோடு—உடலின்மீது போர்த்தலும், ஏக்கழுத்தம்—இறுமாந்திருத்தலும், தாள் இசைப்பு—இருதாளையும் சேர்த்திணைத் திருத்தலும், பழித்தாரமாம்—பழியின் எல்லையாம்.

(க—து.) காட்டிலேயாயினும் தமக்கு மூத்தோரெதிரில் உடலின் மீது போர்த்துக்கொள்ளுதலும் கர்வித்திருத்தலும் அட்டணேக்காலிட்டிருத்தலும் ஆகா.

ஏக்கழுத்தம்—இறுமாந்த கழுத்து — இறுமாப்பு. (ஏ—இறுமாப்பு, உயர்வு. ஏகல் மலைநாட என்பதில் ஏ—உயர்வு). தாரம்—எல்லே.

"பழித்தார் மரம் தம்மின்" என்று கொண்டு ஒரு பிரதி உரைக்குமாறு:—மோட்டுடைய போர்வையும், செருக்கினுல் எடுத்த கழுத்தும், மடமையால் கால்மேற் காற்சேர்த்திருக்குமிருப்பும், மக்களிருந்து வாழாத காட்டின்க ணுயினும் ஆகாவென்று பழித்தார், மரங்கள் தம்மின் மூத்த உளவாகலான்

## நற்கருமஞ்செய்ய நாட்கேட்டல்

92. தலேஇய நற்கருமம் செய்யுங்கால் என்றும்
புலையர்வாய் நாட்கேட்டுச் செய்யார்; தொலேவில்லா
அந்தணர்வாய் நாட்கேட்டுச் செய்க. அவர்வாய்ச்சொல்
என்றும் பிழைப்ப தில.

(ப—பொ.) அறிவுடையோர் மேலான நற்கருமங்களேச் செய்யுமிடத்து எப்போதும் புலையரிடத்து நாட்கேட்டுச் செய்யார். கேடில்லாத அந்தணரிடத்து நாட்கேட்டே நற்கருமம் செய்க, அவர் வாய்ச்சொல் என்றும் பிழைபடுவன வல்லவாம் ஆதலால்.

(ப—ரை.) தலேய நல்கருமம் செய்யுங்கால்—(அறிவுடையோர்) மேலான நற்கருமங்களேச் செய்யுமிடத்து, என்றும்—எப்போதும், புலையர் வாய் நாள்கேட்டு செய்யார்—புலையரிடத்து நாள்கேட்டுச் செய்யார்: தொலேவு இல்லா அந்தணர்வாய் நாள்கேட்டு செய்க—கேடில்லாத அந்தணரிடத்து நாள் கேட்டே நற்கருமம் செய்க: அவர் வாய்ச்சொல் என்றும் பிழைப்பது இல—அவர் வாய்ச்சொல் என்றும் பிழைபடுவன அல்லவா மாதலால்.

(க—து.) அந்தணருடைய வாய்ச்சொல் தவரு தாதலால், ஒரு நல்ல காரியத்தைச் செய்யும்போது அந்தணரையே நல்ல நாள் கேட்டுச் செய்க: புலேயரைக் கேட்டுச் செய்யற்க.

வாய்—ஏழனுருபு. வாய்ச்சொல் என்பதில் வாய்—சினேப்பெயர்.
"நிலேஇய நற்கருமம்" என்றும், "நிலேயியைந்த" என்றும் பாடம்.

## பெரியோர் சபையில் தவிர்வன

93. மன்றத்து நின்றுஞற்றூர். மாசு திமிர்ந்தியங்கார்.
என்றும் கடுஞ்சொல் உரையார். இருவராய்
நின்றுழியும் செல்லார். விடல்.

(ப—பொ.) அறிஞர் சான்றோ ரவைக்களத்து யாதொரு அங்கசேட்டையும் செய்யார். மாசுள்ளவற்றைத் திமிர்ந்து கொண்டு நடவார். எக்காலத்தும் கடுஞ்சொற்கள் உரையார். இருவராயிருந்து பேசுமிடத்தும் போகார். ஆதலால் இவற்றை ஒழிக.

(ப—ரை.) மன்றத்து நின்று உஞற்றூர் — (அறிஞர்) சான்றோ ரவைக்களத்து யாதோர் அங்கசேட்டையும் செய்யார். மாசு திமிர்ந்து இயங்கார்—மாசுள்ளனவற்றைத் திமிர்ந்துகொண்டு நடவார். என்றும் கடுஞ்சொல் உரையார்—எக்காலத்தும் கடுஞ்சொற்கள் உரையார். இருவராய் நின்ற உழியும் செல்லார்—இருவராயிருந்து பேசுமிடத்தும் போகார். விடல்—ஆதலால் இவற்றை ஒழிக. [திமிர்தல்—பூசுதல்.]

(க—து.) பெரியோர்கள் இருக்கின்ற சபையிலே யாதோர் அங்க சேஷ்டையும் செய்தலாகாது. நடக்கும்போது அழுக்குள்ளவைகளைத் தேய்த்துக்கொண்டு நடத்தலாகாது. எப்பொழுதும் கடுமையான சொற்களைச் சொல்லுதல் கூடாது. இருவராக இருந்து பேசுமிடத்தில் போதலாகாது.

"சொல்லார்விடல்" என்ற பாடத்துக்கு உரையிற் பிரதி பேதம்:—இருவராகச் சிலர் வேறே நின்றுழியும் சொல்லா தொழிக.

94. கைசுட்டிக் கட்டுரையார்: கான்மேல் எழுத்திடார்:
மெய்சுட்டி இல்லாரை உள்ளாரோ டொப்புரையார்:
கையிற் குரவர் கொடுப்ப இருந்தேலார்,
ஐயமில் காட்சி யவர்.

(ப—பொ.) ஐய மற்ற அறிவுடையோர் தம் குரவர்முன் கையைச் சுட்டிக்காட்டிப் பேசார்; காலின்மேல் எழுதார். கல்வி முதலியவற்றை உடையாரோடு அவற்றை இல்லாரை மெய்யெனச் சாதித்து ஒப்பிட்டுக் கூறார். குரவர் கொடுப்பதை உட்கார்ந்திருந்து ஏற்கார்.

(ப—ரை.) ஐயம் இல் காட்சியவர் — ஐயமற்ற அறிவுடையோர், கைசுட்டி கட்டுரையார்—தம் குரவர்முன் கையைச் சுட்டிக்காட்டிப் பேசார், கால்மேல் எழுத்து இடார்—காலின்மேல் எழுதார். உள்ளாரோடு இல்லாரை மெய்சுட்டி ஒப்பு உரையார்—கல்வி முதலியவற்றை உடையாரோடு அவற்றை இல்லாரை மெய்யெனச் சாதித்து ஒப்பிட்டுக்கூறார். கையில் குரவர் கொடுப்ப இருந்து ஏலார்—கையில் குரவர் கொடுப்பதை உட்கார்ந்திருந்து ஏற்கார்.

(க—து) குரவரெதிரில் கையைச் சுட்டிக்காட்டிப் பேசுதல் ஆகாது. காலின்மேல் எழுதிக்காட்டுதல் ஆகாது. கல்வி முதலியன இல்லாதவர்களை அவற்றை உடையவர்களுக்குச் சமானமாகச் சாதித்தல் ஆகாது. குரவர் கொடுப்பதை உட்கார்ந்துகொண்டே வாங்கிக்கொள்வது கூடாது.

உரையின் பிரதிபேதம்:—ஒருவரோடொன்றைச் சொல்லுமிடத்துக் கையை நீட்டிக் குறித்துக் கட்டுரையார்; காலால் எழுத்திட்டுக் காட்டார்; இறந்தாரை இருந்து வாழ்வாருடனே அவருடம்பைக்குறித்து ஒப்புரையார்; குரவர் கொடுப்பதனை இருந்து கையாலேலார், ஐயமில்லாத அறிவினையுடையார். இவ்வுரைக்குக் ''காலாலெழுத்திடார்'' என்பது பாடம்.

## பொன்போல் போற்றத்தக்கவை

95. தன்னுடம்பு தாரம் அடைக்கலம் தன்னுயிர்க்கென்
றுன்னித் துவைத்த பொருளோ டிவைநான்கும் [கால்
பொன்னினைப் போல்போற்றிக் காத்துய்க்க: உய்க்காக்
மன்னிய ஏதம் தரும்.

(ப—பொ.) தன் உடலும், மனைவியும், தன்னிடத்தில் அடைக்கலமாக ஒருவன்வைத்த பொருளும், தன்னுயிர்க்கு உதவியாக எண்ணிச் சேர்த்துவைத்த பொருளும் ஆகிய இந்நான்கினையும் பொன்னைப்போலக் காத்தொழுக. அவ்வாறு ஒழுகாவிடத்து மிகுந்த துன்பத்தைத் தரும்.

(ப—ரை.) தன் உடம்பு—தன்னுடலும், தாரம்—மனைவியும், அடைக்கலம்—தன்னிடம் அடைக்கலமாக ஒருவன் வைத்த பொருளும், தன் உயிர்க்கென்று உன்னி துவைத்த பொருளோடு—தன்னுயிர்க்கு உதவியாக எண்ணிச் சேர்த்துவைத்த பொருளும், இவை நான்கும்—

ஆகிய இந்நான்கனையும், பொன்னினைப்போல் போற்றி காத்துய்க்க—பொன்னைப்போலக் காத்தொழுக. உய்க்காக்கால்—அவ்வாறு ஒழுகா விடத்து, மன்னிய ஏதம் தரும்—மிகுந்த துன்பத்தைத் தரும்.

(க—து.) தன்னுடம்பு—தன்பெண்டாட்டி—தன்னிடத்தில் ஒருவர் அடைக்கலமாக வைத்த பொருள்—தனக்கு ஆபத்துக்காலத்தில் உதவியாகும்படி சேர்த்துவைத்த பொருள் ஆகிய இந்த நான்கையும் அருமையாகப் பாதுகாவாவிட்டால் மிக்க துன்பம் உண்டாகும்.

"எண்ணி நினைத்த பொருளோடு" என்றும், "எண்ணித்து வைத்த பொருளோடு" என்றும், "அன்றே விழுமந்தரும்" என்றும் பாடபேதம் உண்டு.

## இல்வாழ்க்கை சிறப்புறுதற்கான காரணம்

96. நந்தெறும்பு தூக்கணம் புள்காக்கை என்றிவைபோல்
தங்கருமம் நல்ல கடைப்பிடித்துத் தங்கருமம்
அப்பெற்றி யாக முயல்பவர்க் காசாரம்
எப்பெற்றி யானும் படும்.

(ப—பொ.) ஆக்கமுள்ள எறும்பும், தூக்கணம் பறவையும், காக்கையும் என்று சொல்லப்பட்ட இவைகளின் செய்கைபோல நல்லனவாகிய தம் கருமத்தைச் சோராமற் கொண்டு, கிடையாத காலத்திற்கு உதவக் கிடைத்த காலத்தில் உணவிற்குரியவற்றைச் சேர்த்தலும், குளிர்காற்று முதலியவற்றால் இடையூறு உறாதவகையாக இல்லம் இயற்றிக் கொள்ளுதலும், சுற்றத்தாரை விளித்துண்கையுமாகிய இக் கருமங்களைச் செய்பவர்க்கு, இல்வாழ்க்கையின் ஒழுக்கம் எத்தன்மையானும் சிறப்புறும்.

(ப—ரை.) நந்து எறும்பு—ஆக்கமுள்ள எறும்பும், தூக்கணம்புள்—தூக்கணம் பறவையும், காக்கை—காக்கையும், என்ற இவைபோல்—என்று சொல்லப்பட்ட இவைகளின் செய்கைபோல, நல்ல தம் கருமம்—நல்லனவாகிய தங்கருமத்தை, கடைப்பிடித்து—சோராமல் கொண்டு, தம் கருமம் அ பெற்றியாக முயல்பவர்க்கு—தமது காரியங்களை அம்மூன்றின் தன்மைபோல் செய்பவர்க்கு, ஆசாரம் எ பெற்றியானும் படும்—இல்வாழ்க்கையின் ஒழுக்கம் எத்தன்மையானும் சிறப்புறும்.

(க—து.) எறும்பு கிடையாத காலத்திற் குதவக் கிடைத்த காலத்தில் உணவைச் சேர்க்கும். தூக்கணங்குருவி குளிர்காற்று முதலியவற்ருல் இடையூ றுரு வகையாகக் கூடு கட்டிக்கொள்ளும். காக்கை தன் இனத்தை அழைத்துண்ணும். இங்ஙனமாக இவைகளின் செய்கையை அநுசரிப்பவர்க்கு இல்வாழ்க்கையின் ஒழுக்கம் எவ்விதத்திலும் சித்தியாகும்.

காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்,
அன்னநீ ரார்க்கே உள—திருக்குறள்.

Go to the ant, thou sluggard; consider her ways, and be wise; which, having no guide, overseer, or ruler, provideth her meat in the summer, and gathereth her food in the harvest—Proverbs of Solomon.

நந்து—ஆக்கம்—எழுச்சி—முயற்சி.

## பெரியார்முன் பேசு முறைமை

97. தொழுதானும் வாய்புதைத் தானுமஃ தன்றிப்
பெரியார்முன் யாதும் உரையார்: பழியவர்
கண்ணுளே நோக்கி யுரை.

(ப—பொ.) அறிஞர் பெரியார்முன் யாதேனுமொன்று உரைக்கவேண்டின், வணங்கிநின்றேனும் வாய்புதைத்து நின்றேனும் உரைப்பரேயன்றி வேறு வகையின் உரையார்: ஆதலால் நீ அவர்முன் குற்றம் யாதும் உளவாகாமல் ஆராய்ந்து உரைப்பாயாக.

(ப—ரை.) பெரியார்முன்யாதும்—அறிஞர்பெரியார்முன்யாதேனும் ஒன்று உரைக்கவேண்டின், தொழுதானும் வாய்புதைத்தானும் அஃதன்றி—வணங்கி நின்றேனும் வாய் புதைத்து நின்றேனும் உரைப்பரேயன்றி, உரையார் – வேறுவகையின் உரையார். (ஆதலால்), அவர்கண்—நீ அவர்முன், பழி உள்ளே நோக்கி—குற்றம்யாதும் உளவாகாமல் ஆராய்ந்து, உரை—உரைப்பாயாக.

(க—து.) பெரியோரிடத்தில் ஏதாயினும் சொல்வதானல், வணங்கி நின்ருவது வாய்பொத்தி நின்ருவது சொல்வதன்றி வேறுவிதமாகச் சொல்லலாகாது. அவர்முன் குற்றம் யாதும் உண்டாகாமல் ஆராய்ந்து சொல்க.

"வழியவர்" என்றும் பாடம்.

## புகலாகாத இடங்கள்

98. சூதர் கழகம் அரவ மருக்களம்
பேதைக ளல்லார் புகாஅர். புகுபவேல்
ஏதம் பலவும் தரும்.

(ப—பொ.) சூதாடுமிடத்தும், ஆரவாரம் நீங்காதவிடத்தும், அறியாமையை உடையரல்லார் புகார். புகுவராயின் பல துன்பங்களும் உளவாம்.

(ப—ரை.) சூதர் கழகம்—சூதாடு மிடத்தும், அரவம் அரு களம்—ஆரவாரம் நீங்காத விடத்தும், பேதைகள் அல்லார்—அறியாமையை யுடையரல்லார், புகார்—புகார். புகுபவேல்—புகுவராயின், பல ஏதமும் தரும்—பல துன்பங்களும் உளவாம்.

(க—து.) சூதாடுகின்ற இடத்திலும் ஆரவாரம் நீங்காத இடத்திலும் அறிவுடையார் போகார். போனால் துன்பங்கள் உளவாம்.

"அரவ மமர்களம்" என்றும் பாடம்.

99. உரற்களத்தும் அட்டிலும் பெண்டிர்கள் மேலும்
நடுக்கற்ற காட்சியார் நோக்கார் எடுத்திசையார்
இல்லம் புகாஅர்: விடல்.

(ப—பொ.) சோர்வற்ற அறிவையுடையவர், ஆரவாரம் செய்யுமிடத்தும் மடைப்பள்ளியிலும், பெண்டிர்கள் உறையிடத்தும். நோக்கார், எடுத்துரையார், இல்லத்துட்புகார்: ஆதலால் நீ விடுக.

(ப—ரை.) நடுக்கு அற்ற காட்சியார்—சோர்வற்ற அறிவை யுடையவர், உரல்களத்தும்—ஆரவாரம் செய்யுமிடத்தும், அட்டிலும்—மடைப்பள்ளியிலும், பெண்டிர்கள் மேலும்—பெண்டிர்கள் உறையிடத்தும், நோக்கார்—நோக்கார்: எடுத்து இசையார்—எடுத்துரையார்: இல்லம் புகார்—இல்லத்துட் புகார்: விடல்—ஆதலால் நீ விடுக.

(க—து.) ஆரவாரம் செய்யு மிடத்தைப் பார்த்தலும், மடைப் பள்ளியில் எடுத்துரைத்தலும், பெண்டிர்கள் உறைகின்ற இல்லத்துட் புகுதலும் ஆகா.

எடுத்திசைத்தல்—குரலெடுத்துப் பேசுதல். இச்செய்யுள் நிரனிறை.

எடுத்திசையார் இல்லம் புகாஅவிடல் என்பதற்கு ஒரு பிரதி—"வாருமென்று பிரியமாக அழையாத மனையிடத்தும் புகுதலொழிக" என்றுரைக்கின்றது.

## ஆசாரம் வீடுபேற்ருர்

100. அறியாத தேயத்தான்; ஆதுலன், மூத்தான்,
இளையான், உயிரிழந்தான், அஞ்சினுன், உண்பான்,
அரசர் தொழில்தலை வைத்தான், மணுளனென்
றென்பதின்மர் கண்டீர் உரைக்குங்கால் மெய்யான
ஆசாரம் வீடுபெற் ருர்.

(ப—பொ.) அறியாத தேசத்தான், வறியோன், மூத்தோன், சிறுவன், உயிரிழந்தவன், பயமுற்றவன், உண்பவன், அரசர் தொழிலில் தலைவைத்தவன், மணமகன், என்னும் இவ்வொன்பதின்மரும் உண்மையாய் உரைக்குமிடத்து ஆசாரமிலிகளாவர்.

கண்டீர்—முன்னிலை யசை. வீடு (—விடுதல்)—முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

"உரைக்குங்கால் ஆற்றவும்" என்றும், "உலகத்தீ ராற்றவும்" என்றும் பாடம்.



# ஆசாரக் கோவை

## அருப்பத அகராதி

அசையாத உள்ளம்—தளராத உள்ளம்.

அடுக்களை—அட்டில்—மடைப்பள்ளி.

அடைக்கலம்—தன்னிடத்தில் அடைக்கலமாக ஒருவன் வைத்த பொருள்.

அட்டில்—மடைப்பள்ளி.

அணங்கு—தெய்வம்.

அந்தரம்—வேறோரிடம்.

அப்பெற்றி—அத்தன்மை.

அரசர் தொழில் தலைவைத்தான்—அரசர் தொழிலில் தலைவைத்தவன்.

அரவம்—ஆரவாரம்.

அரவம் அருக் களம்—ஆரவாரம் நீங்காத இடம்.

அல்கந்தி—மாலை.

அல்கு—இரவு.

அழுக்காறு—பிறராக்கத்தின்கண் பொறாமை.

அளவளாவு—கலத்தல்—நெஞ்சுகலத்தல்.

அளை—புற்று.

அளையுறைபாம்பு—புற்றில்வாழ் அரவு.

அன்பிற் செறப்பட்டார்—அன்பினின்றும் வேறுபட்டார்.

ஆசாரம்—ஒழுக்கம்.—இல்வாழ்க்கையின் ஒழுக்கம்.

ஆசாரம் வீடுபெற்றார்—ஆசாரமிலிகள்.

ஆதுலன்—வறியோன்.

ஆப்பி—சாணி.

ஆரிடம்—இருடிகள் சொல்லிய நூல்.

ஆள்வினை—முயற்சி.

ஆனிலை—பசுக்கொட்டில்—பசு நிற்குமிடம்.

இகந்து—கடந்து.

இகவற்க—அகலாதொழிக.

இகவார்—களையார்.

இடையறுத்துப் போதல்—ஊடறுத்துப் போதல்.

இடையாமம்—நடுக்கங்குல்.

இணைவிழைச்சு—கலவி.

இந்திரதானம்—இந்திரன் உறையுமிடம்.

இயக்கமிரண்டு—மலசல மோசனம்.

இரியார்—இருத்தார்.

இருசார்வு—இருமருங்கு.

இருபுலன்—மலசலங்கள்.

இழுக்கம்—துன்பம்.

இளங்கிளைகள்—(இளைய சுற்றத்தார்) சிறுவர்கள்.

இறந்து—முறைமை கடந்து.

இறைவன்—அரசன்.

இன்பத்துள் இன்பவகையா னொழுகல் — இன்பக்காலத்தில் பிறர்க்கு இன்பு செய்யும் வகையான் இன்புற்று நடத்தல்.

உகுத்தல்—சொரிதல்.

உடுக்கை—ஆடை.

உண்டது கான்றல்—உண்டதனைக் கான்றல்—வமனம்—வாந்தி.

உதவிப்பயன்—தாம் ஒருவருக்குச் செய்த நன்றி.

உயர்ந்துழியேறல்—உயர்ந்தவிடத்து ஏறியிருத்தல்.

உய்க்க—நடத்துக.

உரற்களம்—ஆரவாரம் செய்யுமிடம்.

உரையிடையாய்ந்துரைத்தல்—முன்னர் ஆராய்ந்தன்றிப் பேசும் போது ஆராய்ச்சி செய்து பேசுதல்.

உவா—அமாவாசி—பூரணை.

உளர்தல்—தடவுதல், கோதல்.

உறுமி—கழறியுரைத்து.

உன்னி—எண்ணி.

ஊர் முனிவ—ஊரார் வெறுக்கத்தக்கவை.

எய்தாத வேண்டாமை — கிடைத்தற் கரியவற்றை விரும்பாமை.

ஏக்கழுத்தம்—செருக்கினால் எடுத்த கழுத்து.

ஏதம்—துன்பம்.

ஐயம்—பிச்சை.

ஒட்டார்—உடன்படார்.

ஒள்ளியம்—அறிவுடையோம்.

ஒற்றை முதுமரம்—தனிமுதுமரம்.

கசிவு—அன்பு.

கடை—வாயில்.

கடைபோக வாழ்துமென்பார்—முன்புபோலப் பின் கடைபோக வாழ்துமென்று கருதுவோர். எப்போதும் ஒரு தன்மை யரா வாழ்து மென்பார்.

கட்டுரை—உறுதிச்சொல்.

கண்வளர்தல்—உறங்குதல்.

கதம்—வேகம்.

கல்லேறு—கல்லெறிதல்.

கழிகிழமை—மிக்க உரிமை.

கள்ளாட்டு—கள்ளாற் களித்தாடல்.

காடு—தூரால். (செத்தை)

கால்வாய்த் தொழுவு—காலின்கட் டொழுதல்.

காறிப்பு—காறியுமிதல்.

கானீர்—கால் கழுவ நீர்.

கிடக்கை—கிடக்கு மிடம்.

கிழமை—உரிமை.

குடிமை—குடிப்பிறப்பு.

குறளை—கோட்சொல்லல்.

குறை—காரியம்.

கூரை—வீடு.

கைபுடை—கையோடு கைபுடைத்தல்.

கைவாரா வந்த இடுக்கண்—அகற்றற்கரியதாக நேரிட்ட துன்பம் தாம் முயன்றுசெய்யும் பொருள்கள் கைவாராமையால். வந்த இடுக்கண்.

கொட்டாவி—வாயால்விடும் நெடுஞ் சுவாசம். (கொட்டு + ஆவி)— கொட்டி விடப்பட்ட ஆவி (சுவாசம்).

கோடி—புத்தாடை.

கோட்டி—கோஷ்டி—கூட்டம்.

கோணம்—கோணதிசை.

கோல்தின்றல்—ஒருகோலாலே பல்துடைத்தல்: பல்விளக்குதல்.

கோள்—கோட்பாடு.

சாந்து—சந்தனம்.

சிறியார்—கீழ்மக்கள்.

சிறுகாலை—விடியற்காலம்.

சீயம்—சிங்கம்.

சூதர் கழகம்—சூதாடு மிடம்.

செத்தற் கருங்கலம்—பழங் கருங்கலம். (செத்தல்—பழமையாதல்)

செவிச்சொல்—பிறர்தம் செவியில் சொல்லும் சொல்.

செவியோரார்—கேளார்.

செவ்வி—காலம். தக்க காலம்.

செறப்பட்டார்—(செறல்—கோபம்)

செற்றுவிடும்—கெடுத்துவிடும்.

சேறிர்—செல்லுகின்றீர்.

சொறுண்டார்—சொறியார்.

சொற்சோர்வு—சொல்லிழுக்குதல். சொல்லவேண்டுவதனை மறப்பான் ஒழிதல்.

தந்திரம்—நூன்முறை.

தமித்தா—தனியாக.

தம்முன்—தனக்கு மூத்தோன்—தமயன்.

தலைச்சென்றார்—தம்மிடத்துச் சென்றார்.

தலையுளர்தல்—தலைமயிரைக் கோதல்.

தன்னுயிர்க்கென் றுன்னித் துவைத்தபொருள் — தன்னுயிர்க் குதவியா எண்ணிச் சேர்த்துவைத்த பொருள்.

தாரம்—மனைவி. எல்லை.

தாளிசைப்பு—இருதாளையும் சேர்த் திணைத்திருப்பது.

திட்பம்—யாப்புறவு.

திமிர்தல்—பூசுதல்.

தீண்டாநாள்—மெய்யுறலாகாத நாள்.

துடைப்பம்—விளக்குமாறு.
துய்க்க—உண்க.
துவைத்த—சேர்த்துவைத்த.
துவ்வார்—உண்ணார்.
துளங்காமை—புடைபெயராமை, அசையாமை.
துளி—மழை.
துனியார்—கலாயார். கோபியார்.
துன்பத்துட் டின்புற்றுவாழ்தல்—துன்பக்காலத்தில் அத்துன்பத்துள் அமைவுற்று வாழ்தல்.
தெறி—நொடிப்பு.
தெறுவந்து—வெகுண்டு.
தேசு—விளக்கம்.
தேவகுலம்—தேவாலயம்.
தொலைவு—கேடு.
தொல்வரவு—குடியொழுக்கம்.
நடுக்கற்ற காட்சியார்—சோர்வற்ற அறிவுடையார்.
நந்த—அவிய.
நந்தெறும்பு—ஆக்கமுள்ள எறும்பு.
நல்குரவு—வறுமை.
நாழி—முகத்தலளவைக் கருவி—படி.
நாளந்தி—சிறுகாலை, விடியற்காலம்.
நிரயம்—நரகம்.
நிரல்பட—வரிசைப்பட.
நிலக்கிழமை—நிலத்துக் குரிமை.
நிலத்துளக்கு—பூமியதிர்ச்சி.
நிறுத்தமனமில்லார் சேரி—பொதுமகளிர் சேரி.
நிறையுவா—பூரணை.
நீடுநிலை—நெடிதாகநிற்கை.
நெடுவாழ்க்கை—நெடிய வாணாள்.
பகற்கிழவோன்—சூரியன்.
படிறு—வஞ்சனையுரை.
பட்டியுரை—வாய்காவாது வேண்டிய உரைக்கும் உரை.

பயின்றன—பழகினவை.

பழித்தாரமாம்—பழியின் எல்லையாம்.

பலி—தெய்வங்களுக்கிடும் உணவு.

பாடு—கிடத்தல்.

பால்—தன்மை.

பாரித்து—பரப்பி.

பாழ்மனை—குடியில்லாதமனை.

புரிந்து—விரும்பி.

புல்விதழ்—புறவிதழ்.

புழைக்கடை—பின்புற வாயில்.

பெரியார்—அரசர்.

பைங்கூழ்—பயிர்.

பொச்சாவார்—மறவார் (இகழார்)

போற்றியெனப்படுவார்—பிறரால் போற்றியென்று சொல்லப் [படுவார்.

மடுத்து—சேர.

மணாளன்—மணமகன்.

மண்டிலஞ் செய்தல்—உண்கலத்தைச் சுற்றி மந்திரஞ்சொல்லி நீரிறைத்தல்.

மந்திரங்கொள்ளல்—ஆராய்தல்.

மயிர்களைதல்—க்ஷௌரம் செய்தல்.

மனமழுங்கல்—மனம் கலங்குதல்.

மனைப்பலி—மனையுறை தெய்வங்களுக்குப் பலி.

மன்றம்—சான்றோ ரவைக்களம்.

மாசுணி—அழுக்காடை.

மிக்க இருதேவர் நாள்—ஆதிரையும் ஓணமும்.

மீக்கூற்றம்—சொற்செலவு, செல்வாக்கு.

மீக்கோள்—மேற்போர்வை.

முகடு—வாயில்.

முப்பாலொழுக்கு—அறநூல்விதி பொருள்நூல்விதி இன்பநூல் [விதி.

முழை—குகை. முழை யுறை சீயம்—குகையில்வாழ் சிங்கம்.

முளிபுல்—முற்றியபுல். (முளி—முதிர்வு)

முறை—முறைப்பெயர்.

மெய்யாய காட்சியவர்—உண்மையான அறிவையுடையவர்.
மெல்கோல்—பல்—விளக்கும் கழி.
மேதைகள்—அறிவுடையார்.
மோட்டுடைப் போர்வை—உடலின்மீது போர்த்தல்.
வகையி லுரை—கூறுபாடில்லாத உரை.
வசை—பிறரைப் பழியுரைக்கும் உரை.
வடு—நீங்காத பழி.
வடுக்குற்றம்—வடுப்படும் குற்றம்.
வண்ணமகளிர்—கோலஞ்செய்யு மகளிர்—வேசையர்.
வழிவிலங்கினர்—வழிகொடுத்து விலங்கிப்போயினர்.
வளர்ச்சி } —உறங்குதல்.
வளர்தல் }
வளி—காற்று.
வாயில்விழைச்சு—வாயெச்சில்.
வாய்புதைத்தல்—வாயைக் கையால் மூடுதல்.
வாய்பூசுதல்—வாயலம்புதல்.
வாய்வது—பழுதில்லாமை.
வாலாமை—தூய்மையில்லாமை.
வால்—தூய்மை.
வான்முறை—வாலியமுறை.
விகிர்தம்—ஒருவன்செய்கை சொல் முதலாயினவற்றைத் தானும் அவ்வகை இகழ்ந்து செய்துகாட்டல்—விளையாட்டு.
விண்ணதிர்ப்பு—இடிமுழக்கம்.
விழுத்தக்கார்—சீர்மை தக்கார்.
விழைச்சு—புணர்ச்சி.
வீழ்மீன்—விண்வீழ் கொள்ளி.
வீளை—கனைத்தல் முதலியன செய்தல்.
வெண்பலி—சாம்பல்.
வேள்வி—யாகம்.
வைகறை யாமம்—வைகறையாகிய பின்யாமம்.
வைதல்—திட்டுதல்.
வெளவல்—பிறர்பொருளைத் தாம் வெளவ வேண்டும் காதல்.

---

PRINTED AT THE DIOCESAN PRESS, MADRAS—1923. B.61